10th August 1960]

*Cinema theatres*

* 86 *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இரவு குறிப்பிட்ட நேரத்திற்குமேல் நடைபெறும் சினிமாத் தியேட்டர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படுகிறதா?

(ஆ) அப்படியானல், 1960-ல் இதுவரை எத்தனை தியேட்டர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) One in Thanjavur and one in Madras.

SRI N. R. THIAGARAJAN: ஸார், குறிப்பிட்ட படம் ஓடும் தியேட்டர்களை சஸ்பெண்ட் செய்து நடவடிக்கைகள் எடுப்பதற்குப் பதிலாக, அபராதம் மட்டும் விதிக்கும் முறையை கையாள்வார்களா ? படங்கள் 15,000 அடிக்கு மேல் போவதால்தான் அதிக நேரம் ஓட வேண்டிவருகிறது. ஆகவே, படங்கள் 15,000 அடிக்குக்குறைவாகத் தயாரிக்கச் சட்டம் போட்டு விதி வகுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: சஸ்பெண்ட் பண்ணினுலே, அது அபராதத்திற்கு மேல் வரும்படி குறைகிறது, செலவினங்கள் ஏற்படுகின்றன. படத்தின் நீளத்தை குறைப்பது பற்றி இந்தக் கேள்வியில் பதில் சொல்ல முடியாது.

*Common Police Force for the Southern Zone*

* 87 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தென்மண்டலப் போலீஸ் படை ஒன்று அமைக்கும் திட்டம் இப்போது எந்த நிலையில் இருக்கிறது ?

(ஆ) இதில் சம்பந்தப்பட்ட ஏனைய மாநில சர்க்கார்கள் ஒத்துக்கொண்டு விட்டார்களா ?

(இ) இத் திட்டம் உருவானல் எப்போது அமுலுக்கு வரும் ?

(ஈ) அதன் மூலம் இம்மாநிலத்திற்குள்ள அனுகூலங்கள் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*), (*b*) & (*c*).—The matter is still in the stage of consideration by the Inspector-General of Police of the States in Southern Zone.

(*d*) In cases of emergencies in this State, the entire personnel of the Common Armed Police Reserve will become available for use in this State and it wil ease the burden of the State in respect of keeping an armed reserve in sufficient strength to meet an emergency.

[10th August 1960

SRI A. VEDARATHNAM: முன்பு இந்தப் பிரச்னை வந்த காலத்தில் கேரள ராஜ்யத்தைத் தவிர மற்ற ராஜ்யங்கள் இதற்கு ஒத்துக் கொண்டிருந்தார்கள். இப்பொழுது இருக்கிற கேரள அரசாங்கம் அதை ஏற்றுக்கொண்டிருக்கிறார்களா? அப்படியானால் அதன் பேரில் எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கேரள சர்க்கார் பல பிரச்னைகளை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அவைகளில் அனுகூலமான முடிவு எடுப்பார்கள் என்றும் எதிர்ப்பார்க்கிறேன்.

SRI A. VEDARATHNAM: அப்படி ஒரு பொது போலீஸ் படை ஏற்படுத்துவது என்று முன் வந்தால் அது எந்த இடத்தில் அமைக்கப்படும்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஒவ்வொரு ராஜ்யத்திலும் ஒவ்வொரு பகுதி அமைக்கப்படும்.

*"Your Friend"*

*88 *Q*.—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

"உங்கள் நண்பன்" என்ற போலீஸ் படக்காட்சி எந்தெந்த ஜில்லாக்களிலே, எத்தனை தடவைகள் காட்டப்பட்டது?

THE HON. SRI C. SUBRAMANIAM: The film was exhibited in all the districts in the State including Madras City. It is not possible to state the number of times the film was exhibited, as no record is maintained for the purpose.

SRI P. G. MANICKAM: இந்தப் படக்காட்சிகள் எல்லாம் போலீஸ் இலாகா மூலம் காட்டப்படுகிறதா அல்லது யாரால் காட்டப்படுகிறது? சினிமா தியேட்டர்கள் ஒவ்வொன்றும் இந்தப் படக்காட்சியைக் காட்டுவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: பல இடங்களில் இந்தப் படக்காட்சி காட்டப்படுகிறது. போலீஸ் இலாகா மூலம் மட்டும் அல்ல.

*Buffalo Farm*

* 89. *Q*.—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have instructed the District Veterinary Officer, Erode, to examine the feasibility of opening a buffalo farm in Chennimalai forests;